3rd November 1962]

திரு. ஜே. பொன்னுசாமி வில்லவாராயர் : நெல்லை மாவட்டத்தில் எண்ணெ சுத்திகரிப்பு ஆலை வைப்பதாக ஏதாவது உத்தேசம் உண்டா ?

கனம் திரு. ஆர். வெங்கட்ராமன் : இன்னும் எங்கு வைப்பது என்று தீர்மானமாகவில்லை. தமிழ்நாட்டில் இருக்குமா என்பதே சந்தேகம். அதற்குள் எந்த ஊரில் வைக்கப்படும் என்ற பிரச்னை எழுப்புவது சரி அல்ல.

*Firewood*

* 264 *Q.*—VIDWAN T. MUTHUKANNAPPAN : Will the Hon. the Minister for Agriculture be pleased to state—

(*a*) the steps, if any, taken to procure more firewood for the State ;

(*b*) whether any steps have been taken to check the rise in price of firewood ; and

(*c*) what they are?

THE HON. SRI P. KAKKAN : (*a*) *to* (*c*) A statement [a] is placed on the table of the House.

வித்துவான் தி. முத்துக் கண்ணப்பன் : ஐயா, இந்தக் கேள்வியில் (ஆ) பகுதியில் விறகு விலையைக் கட்டுப்படுத்துவதற்கான நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறதா என்று கேட்கப்பட்ட கேள்விக்கு கொடுக்கப்பட்ட பதிலில் தக்க விவரம் இல்லை.

கனம் திரு. பி. கக்கன் : விலை ஏறாமல் பார்த்துக்கொள்வதற்கு அரசாங்கம் எவ்வளவு தூரம் செய்ய முடியுமோ அவ்வளவு தூரம் அதற்கான பிரயத்தனங்களைச் செய்துகொண்டிருக்கிறது.

திரு. டி. பி. ஸ்ரீனிவாசவரதன் : செங்கற்பட்டு ஜில்லாவிலும், தென்னார்க்காடு ஜில்லாவிலும் சவுக்குத் தோப்பு வைத்துப் பயிரிடுபவர்களிடம் ஐந்தாறு பேர்கள் சேர்ந்து முன்னதாகவே பணத்தைக் கொடுத்து வெட்டியெடுத்து அவர்கள்தான் விலையை நிர்ணயம் செய்கிறார்கள். அப்படி ஐந்தாறு வருஷமாகச் செய்து வருகிறார்கள். அது நடந்துகொண்டிருக்கிறது. அது கவர்ன்மெண்டுக்குத் தெரியுமா ?

கனம் திரு. பி. கக்கன் : எனக்குத் தெரியாது. அரசாங்கத்திற்கு அதுபற்றித் தகவல் இல்லை. பிரச்னையைப் பரிசீலனை செய்வோம்.

திரு. டி. துரைராஜ் : விலை ஏறுகிறது, விலை ஏறுகிறது என்று சொல்கிறார்களே, அது வாங்குகிறவர்களால் விலை ஏறுகிறதா, விற்பவர்களால் ஏறுகிறதா, அல்லது அரசியல் வாதிகளால் ஏறுகிறதா ?

கனம் திரு. பி. கக்கன் : எல்லாத் தரப்பிலும் விலை ஏறுகிறது.

---

[a] Printed as Appendix I on page 126

திரு. ஜே. பொன்னுசாமி வில்லவராயர்: கூட்டுறவு சொசைடியில் விறகுக் கடை வைத்தால் ஃபாரஸ்ட் டிபார்ட்மெண்டு உதவி செய்வார்களா ?

**கனம் திரு. பி. கக்கன் :** விறகுக் கடை கூட்டுறவு சொசைடியில் நடத்துவதென்றால் ஆதரவு உண்டு.

*Concessions*

* 265 *Q.*—Dr. A. SREENIVASAN : Will the Hon. the Minister for Agriculture be pleased to state—

(*a*) the various educational and other concessions granted to Harijans; and

(*b*) the criteria for the grant of such concessions to Harijans ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) & (*b*) A paper[a] is placed on the table of the House.

திரு. ஜே. பொன்னுசாமி வில்லவராயர்: மதம் மாறியவர்களுக்குக் கல்விச் சலுகை சட்டத்தில் மறுக்கப்பட்டிருக்கிறதா ?

**கனம் திரு. பி. கக்கன் :** அரசியல் சட்டப்படி மதம் மாறியவர்கள் ஷெட்யூல் காஸ்ட் ஆகக் கருதப்படுவதில்லை.

*Sugarcane*

* 266 *Q.*—Sri S. K. SAMBANDHAN : Will the Hon. the Minister for Agriculture be pleased to state—

(*a*) the amount of cess on sugarcane (i) collected; and (ii) utilised during the year 1961-62; and

(*b*) how the amount has been utilised?

THE HON. SRI P. KAKKAN : (*a*) (i) The amount of cess on sugarcane collected during 1961-62 was Rs. 16,41,656.

(ii) The amount utilised during the year 1961-62 was Rs. 8,92,411.

(*b*) The amount has been utilised for Sugarcane Development, Sugarcane Research Schemes and the Road Development Schemes in the Sugar Factory areas.

**திரு. எஸ். கே. சம்பந்தன் :** ஐயா, இந்தத் தொகை அதிகமாக வசூலிக்கப்பட்டும் அந்தத் தொகை பூராவும் அந்தக் கரும்பு சம்பந்தப்பட்ட முன்னேற்றத்திற்கு செலவிடப்படாததற்குக் காரணம் என்ன ?

**கனம் திரு. பி. கக்கன் :** காரணம், ரோடுகளை அகலப்படுத்துவதற்கு இடம் கிடைக்காததுதான். அக்விஸிஷன் செய்வதில் துரிதமான நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று சொல்லியிருக்கிறோம்.

**திரு. எஸ். கே. சம்பந்தன் :** செஸ் தொகையிலிருந்து புதிதாக ரோடு அமைக்கத்தான் இந்தப் பணம் செலவிடப்படுகிறதா ? செஸ் தொகையிலிருந்து போடப்பட்ட பாதைகளைச் செப்பனிடுவதற்கு

---

[a] Printed as Appendix II on pages 126–128